3rd November 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : உப கேள்விகள் போடும் கனம் அங்கத்தினர்கள் தயவுசெய்து இந்த ரிப்போர்ட்டைப் படித்துவிட்டு உப கேள்விகள் போட வேண்டும். எந்த எந்த இலாகாக்களில் எந்தெந்தக் காரியங்களுக்கு எப்போதிருந்து தமிழ் உபயோகிக்கப்படும் என்பதுபற்றிய விவரங்கள் ரிப்போர்ட்டில் விரிவாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சட்டம் செய்வது வெகு சுலபம். ஆனால் சட்டத்தை அமலுக்குக் கொண்டுவருவதில் எவ்வளவு கஷ்டம் இருக்கிறது என்பது சட்டத்திலுள்ள முக்கிய விஷயங்களைப் பற்றியும், நடைமுறையில் உள்ள சாத்தியக் கூறுகளைப் பற்றியும் ஆலோசிக்கும்போதுதான் தெரியும். அவைகளைப் பற்றி ஆலோசித்து விரிவானதொரு அறிக்கையைச் சமர்ப்பித்திருக்கிறோம். எந்தெந்தக் காரியங்களுக்குத் தமிழின் உபயோகத்தை விரைவில் கொண்டுவரலாம் என்பது அறிக்கையைப் படித்தால் தெளிவாகத் தெரியும்.

SRI K. VINAYAKAM : ஆட்சி மொழி தமிழாக இருப்பினும்கூட போடப்படும் கேள்விகளும் அவைகளுக்குத் தரப்படும் பதில்களும் ரிப்போர்டுகளும் ஆங்கிலத்திலே இருந்தால்தான் அவை தெளிவாக இருக்கும். என்ற காரணத்தால் ஆங்கிலத்தை அவ்வளவு சுலபமாக இந்த நாட்டை விட்டுத் தள்ளிவிட முடியாது என்பதையும் அந்தக் காரணத்தால் குறைந்த பட்சம் இன்னும் 50 ஆண்டுகளாவது ஆங்கிலம் இங்கே இருக்க வேண்டுமென்பதையும் அரசாங்கம் ஒத்துக்கொள்கிறதா?

MR. SPEAKER : The hon. Member is giving his opinion. It is not a question.

SRI K. VINAYAKAM : Sir, it is not an opinion. It is a question.

*Conference of Agricultural Officials held at Tiruchirappalli*

* 812 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the details of the Comprehensive programme of work for the year 1958–59 drawn at the Conference of Agricultural Officials held at Tiruchirappalli on 7th April 1958; and

(*b*) the anticipated increase in the production by carrying it out?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement[a] is placed on the table of the House.

SRI S. LAZAR : : மேஜையின் மீது வைக்கப்பட்டிருக்கும் பதிலில் தெரிவிக்கப்பட்டிருக்கும் திட்டம் மாநிலம் பூராவுக்குமா அல்லது சில பகுதிகளுக்கா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : திட்டம் மாநிலம் பூராவுக்குமாகத்தான் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

*Employment of discharged Prisoners*

* 813 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) what are the Government factories and workshops in which discharged prisoners have been employed and how many are so employed; and

[a] Printed as Appendix VI on page 479 infra.

[3rd November 1958

(b) what are the prisons in which industrial or craft training is imparted to convicts?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) Six discharged prisoners are employed in the factories.

| Name of the Factory or Workshop. | Number of Discharged Prisoners employed. |
|---|---|
| (1) Stationery and Printing Department ... | 2 |
| (2) Transport and Machinery (Highways) Workshop, Pudukkottai ... ... | 1 |
| (3) Cinchona Department (The Nilgiris) ... | 3 |

(b) Central Jails at Tiruchirappalli, Cuddalore, Coimbatore, Madurai, Vellore, Madras and Salem; State Jail for Women, Vellore, District Jail, Pudukkottai; Borstal School, Palayamcottai; and the Special Sub-Jail, Salem.

SRI P. G. MANICKAM: குற்றம் செய்து சிறைசென்று திரும்புகிறவர்களில் பெரும்பாலோர் ஏழைகள் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆகையால் அவர்கள் தங்களுக்கு வேலை கொடுக்க வேண்டுமென்று சர்க்காருக்கு விண்ணப்பித்துக்கொண்டால், அவர்களுக்குச் சர்க்கார் தொழிற்சாலைகளில் வேலை கொடுக்க அரசாங்கம் உத்தேசிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அந்த முறையில் தான் அவர்கள், நான் இப்போது குறிப்பிட்ட சர்க்கார் தொழிற்சாலைகளில் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

SRI S. NAGARAJA MONIGAR: சிறையிலிருந்து விடுதலையாகிய கைதிகளில் பெரு ாலோர் திரும்பவும் சிறைக்குச் செல்லவே விரும்புகிறார்கள் என்பது உண்மையா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அது கனம் அங்கத்தினருக்குத் தெரிந்திருக்கலாம், எனக்குத் தெரியாது.

SRI P. S. SANTHANAM: திருடுவது போன்ற குற்றங்களைச் செய்து சிறை சென்று திரும்பியவர்களுக்கு, சிறையில் அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கப்பட்ட தொழில்களையே சர்க்கார் தொழிற்சாலைகளில் கொடுத்தால், அவர்கள் மீண்டும் திருடாமல் அந்தத் தொழில்களைச் செய்து கொண்டிருப்பார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சிறையில் அவர்கள் கற்றுக்கொள்ளும் தொழில்கள் அவர்கள் விடுதலையான பிறகு வாழ்க்கை நடத்துவதற்கு அவர்களுக்குப் பயன்பட வேண்டுமென்பதும், அதற்கேற்ற முறையிலேயே சர்க்கார் தொழிற்சாலைகளிலும் வேறு தொழிற்சாலைகளிலும் அவர்கள் வேலைக்கு அமர்த்தப்பட வேண்டுமென்பதும்தான் அரசாங்கத்தின் எண்ணம்.

*Teachers of Salem and Tiruchirappalli District Boards*

* 814 *Q.*—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) when the payment of salaries for the months of January, February and March, 1958 was made to the teachers under the District Boards of Tiruchirappalli and Salem respectively; and